# ॥ प्रश्नोत्तररत्नमालिका ॥

## ப்ரச்னோத்தர ரத்ன மாலிகா ।

(1)

कः खलु नालंक्रियते दृष्टादृष्टार्थसाधनपटीयान् ।
अमुया कण्ठस्थितया प्रश्नोत्तररत्नमालिकया ॥

க:கலு நாலங்க்ரியதே த்ருஷ்டா த்ருஷ்டார்
தஸாதநபடீயான் ।
அமுயா கண்டஸ்திதயா ப்ரச்நோத்திர ரத்னமாலிகயோ ॥

கண்ணுக்கு எதிரேயுள்ளதையும், கண்ணுக்குத் தெரியாததையும் சாதிக்கும் வல்லமை படைத்தயார்தான் இந்த கேள்வி - பதில் என்ற வைரக்கல் மாலையால் அழகாய் இருக்க மாட்டார்? ஒன்று தேவை; அவர் அந்த மாலையை கழுத்தில் அணிய வேண்டும். (மனப்பாடம் செய்திருக்க வேண்டும்)

(2)

भगवन्किमुपादेयं? गुरुवचनं, हेयमपि च किम्? अकार्यम् ।
को गुरुः? अधिगततत्वः शिष्यहितायोद्यतः सततम् ॥

பகவன் கிமுபாதேயம் குருவசனம் ஹேயமபிச
கிமகார்யம் ।
கோ குரு ரதிகத தத்வ: சிஷ்யஹிதா யோத்யத: ஸததம் ॥

மதிப்பிற்குரியவரே! உலகில் எது ஏற்கத் தக்கது? குருவின் சொல். எது நீக்கத் தக்கது? செய்யக் கூடாதது? யார் குரு? தத்வத்தையறிந்தவர். அன்றியும் எப்பொழுதும் சிஷ்யனின் நன்மைக்காகப் பாடுபடுபவரும்.

(3)

त्वरितं किं कर्तव्यं विदुषां? संसारसंततिच्छेदः ।
किं मोक्षतरोर्बीजं? सम्यक्ज्ञानं क्रियासिद्धम् ॥

த்வரிதம் கிம் கர்தவ்யம் விதுஷாம்? ஸம்சார ஸந்ததிச்சேத: ।
கிம்மோக்ஷதரோர்பீஜம்? ஸம்யக் ஞானம் க்ரியாஸித்தம் ॥

வித்வான்கள் சட்டெனச் செய்ய வேண்டியது எது? இந்த உலகியல் வாழ்க்கைத் தொடர் நீக்கம். மோக்ஷமாகிய மரத்தின் விதை யாது? அனுஷ்டானத்தின் பயனாய் கிட்டிய பேரறிவு.

(4)

कः पथ्यतरो? धर्मः, कः शुचिरिह? यस्य मानसं शुद्धम्।
कः पण्डितो? विवेकी, किं विषम्? अवधीरणा गुरुषु ॥

க: பத்யதரோ தர்ம: க: சுசிரிஹயஸ்ய மானஸம் சுத்தம்।
க: பண்டிதோ விவேகீ கிம்விஷம் அவதீரணா குருஷு ॥

நமக்கு மிக உகந்தது யாது? தர்மமே; யார் தூயவர்? எவரது மனது சுத்தமாய் இருக்கிறதோ அவரே; யார் பண்டிதர் - பகுத்தறிவாளர்; விஷம் எது? குருவாய் இருப்பவர்களிடத்தில் அலக்ஷ்யம்.

(5)

किं संसारे सारं? बहुशोऽपि विचिन्त्यमानमिदमेव।
किं मनुजेष्विष्टतमं? स्वपरहितायोद्यतं जन्म ॥

கிம் ஸம்ஸாரே ஸாரம்? பகுசோபிசிந்த்யமானமிதமே வ।
கிம் மனுஷ்யேஷு இஷ்டதமம் ஸ்வபரஹிதா
யோத்யதம்ஜன்ம ॥

உலக வாழ்க்கையில் எது மிக்கது? இது பற்றிதான் பலபடியாக ஆராயப்படுகிறது. முடிவாகவில்லை. மனிதர் களிடத்தில் எது மிக விரும்பத்தக்கது? தனக்கும், பிறருக்கும் நன்மை தேடுவ்தான பிறப்பு.

(6)

मदिरेव मोहजनकः कः? स्नेहः, के च दस्यवो? विषयाः।
का भववल्ली? तृष्णा, को वैरी? यस्त्वनुद्योगः ॥

மதிரேவ மோஹஜனக: க: ஸ்நேஹ: கே தஸ்யவோ விஷயா:।
கா பவவல்லீத்ருஷ்ணா, கோ வைரீ யஸ்த்வனுத்யோக:॥

எது மது போன்று மயக்கம் கொடுப்பது? நட்பு. திருடர் யார்? உலகியல் விஷயங்கள். எது ஸம்ஸாரத்தை விளைவிக்கும் கொடி? ஆசை. யார் பகைவர்? முயற்சி இல்லாதவர் (தொழில் செய்யாதவர்)

(7)

कस्माद्भयमिह? मरणात्, अन्धादिह को विशिष्यते? रागी।
कः शूरः? यो ललनालोचनबाणैर्न च व्यथितः ॥

கஸ்மாத் பயமிஹ! மரணாத், அந்தாதிஹ கோ
விஸிஷ்யதே! நாகி

க: சூர: யோலலணாலோ சன பாணைர் ந ச வ்யதித :

இவ்வுலகில் நமக்கு எதிலிருந்து பயம் தோன்றுகிறது? மரணத்திலிருந்து. குருடனை விட மிக்கவர் யார்? அல்ப ஆசையுடையவர். யார் சூரர்? மங்கையர் கண் அம்புகளால் தாக்கப்பட்டு துன்பப்படாதவர்.

(8)

पातुं कर्णाञ्जलिभिः किममृतमिह युज्यते? सदुपदेशः।
किं गुरुताया मूलं? यदेतदप्रार्थनं नाम॥

பாதும் கர்ணாஞ்ஜலிபி: கிமம்ருதமிஹ யுஜ்யதே
ஸதுபதேச:।
கிம் குருதாயா மூலம்? யதேதத் அப்ரார்த்தனம் நாம॥

காதுகளாகிய கை நிறைய ஏந்திப் பருகத் தக்க அம்ருதம் எது? நல்லோரின் (நல்) உபதேசம். பெருமைக்கு எது காரண? இரத்தல் என்பார்களே அது இல்லாதிருத்தல்.

(9)

किं गहनं? स्त्रीचरितं, कश्चतुरः? यो न खण्डितस्तेन।
किं दुःखम्? असंतोषः, किं लाधवम्? अधमतो याच्ञा॥

கிம் கஹநம் ஸ்திரீ சரிதம்: கஸ்சதுரோ யோ ந
கண்டிதஸ்தேந।
கிம் து:க மஸந்தோஷ: கிம் லாகவம் அதமதோ யாச் ஞா॥

எது புரியாதது? பெண்களின் நடத்தை; எவன் கெட்டிக்காரன்? அந்த ஸ்திரீ நடத்தையினால் வீணடிக்கப் படாதவன். துன்பம் எது? சந்தோஷமின்மை, எது குறைச்சல்? கிழ்பட்டோரிடம் இரத்தல்.

(10)

किं जीवितम्? अनवद्यं, किं जाड्यं? पाठतोऽप्यनभ्यासः।
को जागर्ति? विवेकी, का निद्रा? मूढता जन्तोः॥

கிம்ஜீவிதம், அநவத்யம் கிம் ஜாட்யம் பாடதோப்யநப்யாஸ:।
தோ ஜாகர்தி விவேகீ, கா நித்ரா மூடதா ஜந்தோ:॥

வாழ்க்கை எது? குற்றமற்றது. ஜடத்தன்மை எது? படித்தும் பழக்கப்படாதது. எவன் விழித்திருக்கிறான்? பகுத்தறிவாளன்; எது தூக்கம்? ஜந்துவின் மூடத்தன்மை

(11)

नलिनीगतजलवत्तरलं किं? यौवनं धनं चायुः ।
कथय पुनः के शशिनः किरणसमाः? सज्जना एव ॥

நளினீ தலகத ஜலவத் தரலம்கிம் யௌவனம் தனம் சாயு: ।
கதய புன:கே சசிந: கிரணஸமா: ஸஜ்ஜனா ஏவ ॥

தாமரை இலைத் தண்ணீர் போல் எது நிலை பெறாதது? இளமை, செல்வம், ஆயுள் இவை. சந்திரன் நிலவு ஒத்தவர் எவர்? நல்லோர்தான்.

(12)

को नरकः? परवशता, किं सौख्यं? सर्वसङ्गविरतिर्या ।
किं सत्यं? भूतहितं, प्रियं च किं प्राणिनाम्? असवः ॥

கோ நரக: பரவசதா கிம்ஸௌக்யம் ஸர்வஸங்கவிரதிர்யா ।
கிம் ஸத்யம் பூதஹிதம் ப்ரியம் ச கிம் ப்ராணிநாமஸவ: ॥

நரகம் எது? பிறருக்கு வசப்பட்டிருத்தல். சௌக்யம் எது? எல்லாவிதப் பற்றையும் விட்டொழித்தல். எது ஸத்யம்? பிராணிகளுக்கு நன்மை செய்தல். எது அன்பிற்குரியது? ப்ராணிகளின் உயிர்.

(13)

कोऽनर्थफलो? मानः, का सुखदा? साधुजनमैत्री ।
सर्वव्यसनविनाशे को दक्षः? सर्वथा त्यागी ॥

கோऽநர்த்தபலோ மாந: கா ஸுகதா ஸாதுஜநமைத்ரீ ।
ஸர்வ வ்யஸன விநாசே கோ தரே: ஸர்வதா த்யாகீ ॥

எது அநர்த்தம் விளைவிப்பது? இறுமாப்பு. ஸுகம் கொடுப்பது எது? நல்லோர் இணக்கம். அனைவரது கவலையையும் களைவதில் வல்லவர் யார்? முற்றிலும் தியாகம் கொண்டவர்.

(14)

किं मरणम्? मूर्खत्वम्, किं चानर्घ? यदवसरे दत्तम् ।
आमरणात्कि शल्यं? प्रच्छन्नं यत्कृतं पापम् ॥

கிம்மரணம் மூர்கத்வம் கிம்சாநர்கம் யதவஸரே தத்தம் ।
ஆமரணாத் கிம்சல்யம் ப்ரச்சன்னம் யத்க்ருதம் பாபம் ॥

எது மரணம்? பிடிவாதமாய் இருப்பது. எது விலை மிக்கது? தக்கசமயத்தில் கொடுத்தது. இறக்கும் வரை எது முள் போல் குத்துவது? தனிமையில் செய்த பாபச்செயல்

(15)

कुत्र विधेयो यत्नो? विद्याभ्यासे सदौषधे दाने ।
अवधीरणा क्व कार्या? खलपरयोषित्परधनेषु ॥

குத்ர விதேயோ யத்ன: வித்யாப்யாஸே ஸதௌஷதே
தானே ।
அவதீரணா க்வகார்யா கலயோஷித்பரதநேஷு ॥

முயற்சியும் பிரயாசையும் எதில் செய்யப்பட வேணும்? கல்வி பயில்வதிலும், நல்ல மருந்தை கொடுப்பதிலும், கொடுப்பதிலும் முயற்சி வேணும். அருவருப்பு எதில் வேணும்? துஷ்டர்கள், பெண்கள். பிறர் உடமை இவற்றில்.

(16)

काहर्निशमनुचिन्त्या? संसारासारता न तु प्रमदा ।
का प्रेयसी विधेया? करुणा दीनेषु सज्जने मैत्री ॥

காऽஹர்நிசமனு சிந்த்யா ஸம்ஸாராஸாரதா ந து ப்ரமதா ।
காப்ரேயஸீவிதேயா கருணாதீநேஷு ஸஜ்ஜநேமைத்ரீ ॥

இரவு பகலாக நினைவில் கொள்ள வேண்டியது எது? இந்த உலக வாழ்க்கையின் நிலையுன் சாரமற்ற தன்மையே தவிர மனைவியல்ல. யாரை மனதிற்கினியதாகச் செய்து கொள்ள வேண்டும்? எளியோரிடத்தில் கருணையும் நல்லோரிடம் நட்பும்.

(17)

कण्ठगतैरप्यसुभिः कस्य ह्यात्मा न शक्यते जेतुम् ।
मूर्खस्य शङ्कितस्य च विषादिनो वा कृतघ्नस्य ॥

கண்டகதைரப்பஸுபி: கஸ்ய ஹ்யாத்மா நசக்யதே
ஜேதும் ।
மூர்கஸ்ய சங்கிதஸ்யச விஷாதிநோவா க்ருக்நஸ்ய ॥

எவனது மனதை உயிர்துறக்கும்படியான நேரத்தில் கூட வெல்ல முடியாது? பிடிவாதக்காரனுடைய சந்தேகமுள்ளவனுடைய, துன்பப்படுபவனுடைய அல்லது செய்நன்றி பாராட்டாதவனுடைய மனதை வெல்ல முடியாது.

(18)

कः साधुः? सद्वृत्तः, कमधममाचक्षते? त्वसद्वृत्तम् ।
केन जितं जगदेतत्? सत्यतितिक्षावता पुंसा ॥

க:ஸாது: ஸத்வ்ருத்த: கமதமமாசக்ஷதே த்வஸத் வ்ருத்தம்।
கேந ஜிதம் ஜகத்தேதத் ஸத்யதிதிக்ஷாவதா பும்ஸா ॥

*சாது (நல்லவர்) யார்? நன்நடத்தையுள்ளவர். யார் கெட்டவர்? நன்நடத்தை இல்லாதவர். யார் இந்த உலகை வெல்கிறார்? உண்மையும், பொறுமையும் உள்ள மனிதரே வெல்கிறார்கள்.*

(19)

कस्मै नमांसि देवाः कुर्वन्ति? दयाप्रधानाय।
कस्मादुद्वेगः स्यात्? संमारारण्यतः सुधियः ॥

கஸ்மை நமாம்ஸி தேவா: குர்வந்திதயா ப்ரதாநாய।
கஸ்மாதுத் வேக: ஸ்யாத் ஸம்ஸாரா ரண்யத: ஸுதிய: ॥

*தேவர்களும் வணக்கம் செலுத்துவது யாருக்கு? இரக்கமே முக்கியம் எனக் கொண்டவனுக்கு. எவனிடமிருந்து (எதிலிருந்து) வெறுப்பு ஏற்படலாம்? நல்ல அறிவாளிக்கு ஸம்ஸாரம் என்ற காட்டிலிருந்து (லிருக்க) வெறுப்பு ஏற்படலாம்.*

(20)

कस्य वशे प्राणिगणः? सत्यप्रियभाषिणो विनीतस्य।
क्व स्थातव्यं? न्याय्ये पथि दृष्टादृष्टलाभाढ्ये ॥

கஸ்யவசே ப்ராணிகண: ஸத்யப்ரியபாஷிணோ விநீதஸ்ய।
க்வ ஸ்தாதவ்யம் ந்யாய்யேபதி த்ருஷ்டாத்ருஷ்ட
லாபாட்யே ॥

*யாரிடம் உயிரினங்கள் உடன்படுகின்றன? உண்மையாகவும் அன்பாகவும் பேசுபவனிடத்திலும் பணிவுள்ளவனிடத்திலும் தான். எங்கே நிலையாக நிற்க வேண்டும்? த்ருஷ்டமாயும் அத்ருஷ்ட மாயுமுள்ள பயன் மிகுந்த நியாய வழியில் நிலையாக நிற்க வேண்டும்.*

(21)

कोऽन्धो? योऽकार्यरतः, को बधिरो यो हितानि न श्रृणोति।
को मूको? यः काले प्रियाणि वक्तुं न जानाति ॥

கோऽந்தோऽகார்யரத: கோபதிரோ யோஹிதாநிந
ச்ருணோதி।
கோ மூக: ய: காலே ப்ரியாணி வக்தும் ந ஜாநாதி ॥

*யார் குருடர்? செய்யக்கூடாததைச் செய்ய முற்பட்டவர். யார் காது கேளாதவர்? நன்மையானதை காது கொடுத்து கேட்காதவர். யார் ஊமை? உரிய காலத்தில் அன்பான வாக்கைப் பேசத் தெரியாதவர்.*

(22)

किं दानम्? अनाकाङ्क्षं, किं मित्रं? यो निवारयति पापात्।
कोऽलंकार:? शीलं, किं वाचां मण्डनं? सत्यम् ॥

கிம்தானம் அநாகாங்க்ஷம் கிம் மித்ரம்யோ நிவாரயதி பாபாத்।
கோऽலங்கார: சீலம் கிம் வாசாம் மண்டநம் ஸத்யம் ॥

தானம் எது? எதிர்பாராமல் கொடுப்பது. நண்பர் யார்? பாபகார்யத்திலிருந்து தடுப்பவன். உடலுக்கு எது அழகு? நன்நடத்தை. பேச்சின் அழகு எது? உண்மை.

(23)

विद्युद्विलसितचपलं किं? दुर्जनसंगतिर्युवतयश्च।
कुलशीलनिष्प्रकम्पा: के कलिकालेऽपि? सज्जना एव ॥

வித்யுத்விலஸித சபலம் கிம் துர்ஜனஸங்கதி:
யுவதயஸ்ச।

குலசீல நிஷ்ப்ரகம்பா: கே கலிகாலேऽபி ஸஜ்ஜநாऽவ।

மின்னல் போல் சலனமான எது? கெட்டவர் நட்பும், பெண்மணிகளும். குலம் ஒழுக்கம் இவற்றில் அசையாதவர் யார்? கலிகாலத்திலும் கூட நல்லவர்தான் அப்படிப்பட்டவர்.

(24)

चिन्तामणिरिव दुर्लभमिह किं? कथयामि तच्चतुर्भद्रम्।
किं तद्वदन्ति भूयो विधूततमसो विशेषेण ॥

சிந்தாமணிரிவதுர்லபமிஹ கிம் கதயாமிதச்சதுர்பத்ரம்।
கிம் தத்வதந்திபூயோ விதூததமஸோ விசேஷண॥

இவ்வுலகில் சிந்தாமணி போல மிகவும் அரிது எது? அதுவா அது பலபடியாகவும் க்ஷேமகரமானது அதைத்தான் சான்றோர் அடிக்கடி சிறப்பித்துக் கூறுகிறார்கள்.

(25)

दानं प्रियवाक्सहितं ज्ञानमगर्वं क्षमान्वितं शौर्यम्।
वित्तं त्यागसमेतं दुर्लभमेतच्चतुर्भद्रम् ॥

தானம் ப்ரியவாக்ஸஹிதம் ஜ்ஞாமகர்வம் க்ஷமாந்விதம்
சௌர்யம்।

வித்தம் த்யாகஸமேதம் துர்லப மேதத் சதுர்பத்ரம்॥

அன்பாகப்பேசி கொடுப்பது, கர்வப்படாமல் அறிவாளியாய் இருப்பது, பொருமையுடன் கூடிய சூரத்தனம், தியாகம் நிரம்பிய செல்வம் இவை நான்கும் சதுர்பத்ரம் என்பது. இதுவே அரிது.

(26)

किं शोच्यं? कार्पण्यं, सति विभवे किं प्रशस्तम्? औदार्यम् ।
कः पूज्यो विद्वद्भिः? स्वभावतः सर्वदा विनीतो यः ॥

இம்சோச்யம் கார்பண்யம் ஸதிவிபவே கிம் ப்ரசஸ்த
மௌதார்யம்।

க: பூஜ்யோ வித்வத்பி: ஸ்வபாவத: ஸர்வதா விநீதோய:॥

*எது வருந்தத்தக்கது? கருமித்தனம். 'செல்வச் செழிப்பு இருக்கும் பொழுது எது சிறப்பானது? தாராளத்தன்மை. அறிஞரால் போற்றப்படுபவர்யார்? இயல்பாகவே பணிவானவர்தான்.*

(27)

कः कुलकमलदिनेशः? सति गुणविभवेऽपि यो नम्रः ।
कस्य वशे जगदेतत्? प्रियहितवचनस्य धर्मनिरतस्य ॥

க:குலகமலதினேச: ஸதிகுணவிபவேடபியோ நம்ர:।
கஸ்ய வசே ஜகதேதத் ப்ரியஹிதவசனஸ்ய தர்ம நிரதஸ்ய॥

*குலமாகிய தாமரையை மலரச் செய்யும் சூர்யன் யார்? குணநலன்கள் நிரம்பியிருந்தும் பணிவுள்ளவன். யாரிடம் அடிமையாகிறது இவ்வுலகம்? அன்பாகவும் நன்மையாகவும் பேசுபவனிடம் மட்டும் அல்ல தர்மத்திலும் நன்கு ஈடுபாடுள்ள வனிடமும் வசப்படுகிறது இவ்வுலகம்.*

(28)

विद्वन्मनोहरा का? सत्कविता बोधवनिता च ।
कं न स्पृशति विपत्तिः? प्रवृद्धवचनानुवर्तिनं दान्तम् ॥

வித்வன் மநோஹராகா ஸத்கவிதா போத வநிதாச।
கம்நஸ்ப்ருசதி விபத்தி: ப்ரவ்ருத்த வசநாநுவந்தினம் தாந்தம்

*அறிவாளிகளுக்கு மனதிற்கினியது எது? நல்ல கவிதையும் அறிவாகிய மங்கையும்தான். ஆபத்து யாரை அணுகுவதில்லை? பெரியோர் பேச்சைக் கேட்டு நடப்பவனையும் புலனடக்க முடையவனையுமே!*

(29)

कस्मै स्पृहयति कमला? त्वनलसचित्ताय नीतिवृत्ताय ।
त्यजति च कं सहसा? द्विजगुरुसुरनिन्दाकरं च सालस्यम् ॥

கஸ்மை ஸ்ப்ருஹயதி கமலா த்வநலஸ சித்தாய
நீதிவ்ருத்தாய்।
த்யஜதி கம் ஸஹஸா த்விஜ குருஸுர நிந்தாகரம்
ச ஸாலஸ்யம்॥

லக்ஷ்மீதேவி யாரை நேசிக்கிறாள்? சோம்பலில்லாத நீதியுடன் ஒழுகுபவனை நேசிக்கிறாள். சட்டென யாரை அவள் விட்டு விடுகிறாள்? த்விஜர்களையும், குருநாதர்களையும், கடவுளரையும் நிந்திப்பவனையும், சோம்பேரியையும் அவள் விட்டு அகல்கிறார்.

(30)

कुत्र विधेयो वासः? सज्जननिकटेऽथवा काश्याम् ।
कः परिहार्यो देशः? पिशुनयुतो लुब्धभूपश्च ॥

குத்ரவிதேயோவாஸ: ஸஜ்ஜந நிகடே ऽதவா காச்யாம்।
க:பரிஹார்யோ தேச: பிசுநயுதோ லுப்தபூபஸ்ச॥

எங்கு வசித்தல் நல்லது? நல்லோர் அருகிலும், காசியிலும் வசித்தல். வசிப்பதற்கு ஏற்றதில்லையென ஒதுக்கப்பட வேண்டிய தேசம் எது? கோள் சொல்பவர் இருக்கும் தேசமும், பேராசையுள்ள அரசன் ஆளும் தேசமும்.

(31)

केनाशोच्यः पुरुषः? प्रणतकलत्रेण धीरविभवेन ।
इह भुवने कः शोच्यः? सत्यपि विभवे न यो दाता ॥

கேநாசோச்ய: புருஷ: ப்ரணதகலத்ரேண தீரவிபவேந।
இஹ புவநே க: சோச்ய: ஸத்யபிவிபவே நயோ தாதா॥

எதனால் ஒரு தனிமனிதன் கவலைக்குள்ளாவதில்லை? மனைவி மக்கள் பணியும்படி உறுதியான செல்வம் இருப்பதனால். இவ்வுலகில் எவன் வருந்தத்தக்கவன்? செல்வமிருந்தும் ஒருவன் கொடுப்பவனாயில்லையானல் வருந்ததக்கவன்.

(32)

किं लघुताया मूलं? प्राकृतपुरुषेषु या याच्ञा ।
रामादपि कः शूरः? स्मरशरनिहतो न यश्चलति ॥

கிம்லகுதாயா மூலம் ப்ராக்ருதபுருஷேஷு யாயாச்ஞா।
ராமாதபிக: சூர: ஸ்மரசரநிஹதோ நய: சலதி॥

கௌரவக் குறைவுக்கு எது காரணம்? பாமர மக்களின் பால் இரப்பது, ராமரை விட சூரன் யார்? மன்மதபாணம் தாக்கியும் ஒருவன் சலனப்படுவதில்லையாகில்.

(33)

किमहर्निशमनुचिन्त्यं? भगवच्चरणं न संसारः।
चक्षुष्मन्तोऽप्यन्धाः के स्युः? ये नास्तिका मनुजाः॥

கிமஹர் நிசமனுசிந்த்யம் பகவத்சரணம் ந ஸம்ஸார:।
சக்ஷுஷ்மந்தோடப்யந்தா: கேஸ்யு: யே நாஸ்திகா
மனுஜா:॥

இரவு பகலாக எது சிந்திக்கத்தக்கது? பகவானின் திருவடி தானேயொழிய சம்சாரமில்லை. கண் இருந்தும் குருடர்கள் யார்? நாஸ்திகர்கள் மனிதர்களான தான்.

(34)

कः पङ्गुरिह प्रथितो? व्रजति च यो वार्धके तीर्थम्।
किं तीर्थमपि च मुख्यं? चित्तमलं यन्निवर्तयति॥

க: பங்குரிஹப்ரதிதோ வ்ரஜதி ச யோ வார்தகே தீர்த்தம்।
கிம் தீர்த்தமபிச முக்யம் சித்தமலம் யத்நிவர்தயதி॥

முடமாயிருப்பவர் யார்? எவனொருவன் வயதானபின் தீர்த்தாடசனம் செய்கிறானோ அவன். எது முக்யமான புண்ய தீர்த்தம்? எது மன வழுக்கைப் போக்குகிறதோ அது.

(35)

किं स्मर्तव्यं पुरुषैः? हरिनाम सदा, न यावनी भाषा।
को हि न वाच्यः सुधिया? परदोषश्चानृतं तद्वत्॥

கிம் ஸ்மர்தவ்யம் புருஷை: ஹரிநாம ஸதா ந யாவநீ
பாஷா।
கோஹி நவாச்ய: ஸுதியா பரதோஷஸ் சாந்ருதம் தத்வத்॥

மனிதர் ஸ்மரிக்க வேண்டியது எது? எப்பொழுதும் ஹரி நாமமேயன்றி யவனர்களின் பாஷையல்ல. அறிவாளி சொல்லக் கூடாதது எது? பிறரைப்பற்றிய தோஷமும் பொய்யும் சொல்லக்கூடாது.

(36)

किं संपाद्यं मनुजैः? विद्या वित्तं बलं यशः पुण्यम्।
कः सर्वगुणविनाशी? लोभः, शत्रुश्च कः? कामः॥

கிம் ஸம்பாத்யம் மனுஜை: வித்யா வித்தம் யச: புண்யம்।
க: ஸர்வகுணவிநாசீ லோப: சத்ருஸ்ச க: காம:॥

மனிதர்கள் சம்பாதிக்க வேண்டியது எது? கல்வியும், பணமும், புகழும், புண்யமும் தான். எல்லா குணங்களையும் கெடுப்பது எது? பேராசை. எதிரி யார்? காமம்.

(37)

का च सभा परिहार्या? हीना या वृद्धसचिवेन ।
इह कुत्रावहितः स्यान्मनुजः? किल राजसेवायाम् ॥

காச ஸபா பரிஹார்யா ஹீநா யா வ்ருத்த ஸசிவே ந।
இஹ குத்ராவஹித: ஸ்யாத் மனுஜ: கில ராஜஸேவாயாம்॥

எந்த ஸபையை அணுக வேண்டாம்? (வயது) முதிர்ந்த மந்திரி இல்லாத ஸபையை விலக்கலாம். இவ்வுலகில் எதில் ஜாக்ரதையாக இருக்க வேண்டும்? அரசாங்க வேலையில்.

(38)

प्राणादपि को रम्यः? कुलधर्मः साधुसङ्गश्च ।
का संरक्ष्या? कीर्तिः पतिव्रता नैजबुद्धिश्च ॥

ப்ராணாதபி கோரம்ய: குலதர்ம: ஸாது ஸங்கஸ்ச।
கா ஸம்ரக்ஷ்யா கீர்தி: பதிவ்ரதா நைஜபுத்திஸ்ச॥

உயிரை விட அருமையானது எது? குலதர்மமும், நல்லோர் இணக்கமும். எது காக்கப்பட வேண்டியது? புகழும், பதிவ்ருதாஸ்திரீயும், தனது சொந்த புத்தியும்

(39)

का कल्पलता लोके? सच्छिष्यायार्पिता विद्या ।
कोऽक्षयवटवृक्षः स्यात्? विधिवत्सत्पात्रदत्तदानं यत् ॥

கா கல்பலதா லோகே ஸத்சிஷ்யாபார்பிதா வித்யா।
கோऽக்ஷய வடவ்ருக்ஷ: ஸ்யாத் விதிவத் ஸத்பாத்ரதத்த தானம் யத்॥

உலகில் கல்பகக்கொடியாய் இருப்பது எது? நல்ல சிஷ்யர்களுக்கு கற்றுக்கொடுத்த கல்வி. அக்ஷய வடவிருக்ஷம் எது? முறைப்படி ஸத்பாத்ரங்களில் கொடுத்த தானமே அது.

(40)

किं शस्त्रं सर्वेषाम्? युक्तिः, माता च का? धेनुः ।
किं नु बलं? यद्धैर्यं, को मृत्युः? यदवधानरहितत्वम् ॥

கிம் சஸ்த்ரம் ஸர்வேஷாம் யுக்தி: மாதா ச கா தேநு:।
கிம் நு பலம் யத்தைர்யம் கோம்ருத்யு: யதவதானரஹிதத்வம்॥

எல்லோருக்கும் எது அம்பு? யுக்தி, தாய் யார்? பசுமாடு. எல்லோருக்கும் எது பலம்? தைர்யம். எது மரணத்திற்கு ஒப்பானது? எதிலும் ஜாக்ரதையாக இல்லாதிருத்தல்.

(41)

कुत्र विषं? दुष्टजने, किमिहाशौचं भवेत्? ऋणं नृणाम् ।
किमभयमिह? वैराग्यं, भयमपि किं? वित्तमेव सर्वेषाम् ॥

குத்ர விஷம் துஷ்டஜநே கமிஹாசௌசம் பவேத் ருணம் ந்ரூணாம்।
கிமபய மிஹ வைராக்யம் பயமபிகிம் வித்தமேவ ஸர்வேஷாம்॥

விஷம் எதில் உள்ளது? துஷ்ட ஜனங்களிடத்தில். இவ்வுலகில் எது சுத்தமில்லாதது? மனிதர்களுக்கு வரும் கடனே. எது பயமின்மை? வைராக்யம். பயம்தான் எது? அனைவருக்குமே பணம் தான் பயம்.

(42)

का दुर्लभा नराणां? हरिभक्तिः, पातकं च किं? हिंसा ।
को हि भगवत्प्रियः स्यात्? योऽन्यं नोद्वेजयेदनुद्विग्नः ॥

கா துர்லபா நராணாம் ஹரிபக்தி: பாதகம் ச கிம்ஹிம்சா।
கோ ஹிபகவத்ப்ரிய: ஸ்யாத் யோऽன்யம் நோத்விஜயேத் அனுத்விக்ன:॥

மனிதர்களுக்கு எது எளிதில் கிடைப்பதில்லை? ஹரிபக்திதான். எது பாபம்? பிறருக்கு இழைக்கும் தீங்கு. பகவானுக்கு இளையவன் யார்? எவன் தானும் அருவருப்பு கொள்ளாமல் பிறரையும் அருவருக்கச் செய்யாமலிருக்கிறானோ அவன்.

(43)

कस्मात्सिद्धिः? तपसः, बुद्धिः क्व नु? भूसुरे, कुतो बुद्धिः ।
वृद्धोपसेवया, के वृद्धाः? ये धर्मतत्वज्ञाः ॥

கஸ்மாத் ஸித்தி: தபஸ: புத்தி: க்வ நு பூஸுரே குதோபுத்தி:।
வ்ருத்தோபஸேவயா கேவ்ருத்தா:யே தர்மசாஸ்த்ரதத்வ ஜ்ஞா:॥

எல்லா கார்யங்களிலும் சித்தி எதனால் ஏற்படும்? தவத்தினால். புத்தி எங்கே உள்ளது? பிராமணனிடத்தில். எதனால் புத்தி உண்டாகிறது? வயதால், ஒழுக்கத்தால், அறிவால் முதிர்ந்தோரை அணுகிஸேவிப்பதனால் புத்தி ஏற்படுகிறது. அம்முதிர்ந்தோர் எவர்? தர்மத்தின் தத்வம் அறிந்தவர்.

(44)

संभावितस्य मरणादधिकं किं? दुर्यशो भवति ।
लोके सुखी भवेत्को? धनवान्धनमपि च किं? यतश्चेष्टम् ॥

ஸம்பாவிதஸ்யம்ரணாததிகம் கிம் துர்யசோ பவதி।
லோகே ஸுகீ பவேத்கோ தனவான் தனமபி ச கிம் யத
ஸ்சேஷ்டம்॥

கௌரவமாயுள்ளவனுக்கு மரணத்தை விட துன்பம் எது? கெட்ட பெயர் (அபயசஸ்) உலகில் சுகமுள்ளவன் யார்? பணக்காரன். பணம் என்பது எது? எதனால் விரும்பியதெல்லாம் கிடைக்கிறதோ அது.

(45)

सर्वसुखानां बीजं किं? पुण्यं,दुःखमपि कुतः? पापात् ।
कस्यैश्वर्यं? यः किल शंकरमाराधयेद्भक्त्या ॥

ஸர்வஸுகாநாம் பீஜம் கிம் புண்யம் து:கமபி குத: பாபாத்।
கஸ்யைச்வர்யம் ய: கில சங்கரமாராதயேத்பக்த்யா॥

எல்லா சுகங்களுக்கும் அடிப்படை காரணம் யாது? புண்யமே. துக்கம் எதனால் ஏற்படுகிறது? பாபத்தால். எவனுக்கு ஆளுமை வருகிறது? எவன் பக்தியுடன் ஸ்ரீசங்கரனை பூஜிக்கிறனோ அவனுக்கு ஆளுமை ஏற்படுகிறது.

(46)

को वर्धते? विनीतः, को वा हीयते? यो दृप्तः ।
को न प्रत्येतव्यो? ब्रूते यश्चानृतं शश्वत् ॥

கோ வர்ததே விநீத: கோ வா ஹீயதே யோ த்ருப்த:।
கோநப்ரத்யேதவ்ய: ப்ரூதே யஸ்சாந்ருதம் சச்வத்॥

எவன் வளர்ச்சி பெறுகிறான்? பணிவுள்ளவன். எவன் ஒதுக்க (நலிவடைவான்) ப்படுவான்? கர்வம் கொண்டவன். எவனை நம்பக்கூடாது? அடிக்கடி பொய் பேசுபவனை நம்பக் கூடாது.

(47)

कुत्रानृतेऽप्यपापं? यच्चोक्तं धर्मरक्षार्थम् ।
को धर्मोऽभिमतो? यः शिष्टानां निजकुलीनानाम् ॥

குத்ராந்ருதேப்யபாபம் யச்சோக்தம் தர்மரக்ஷார்த்தம்।
கோதர்மோऽபிமதோய: சிஷ்டானாம் நிஜகுலீநாநாம்॥

பொய் சொன்னாலும் எங்கே பாபமில்லை? தர்மத்தை காக்க வேண்டி சொன்ன பொய் பாபமாகாது. தர்மம் எது? ஒழுக்கமுள்ளவர்களும் தனது உற்றார் உறவினர் குல ஜலங்களும் விரும்பி அனுஷ்டிப்பது தர்மம்.

(48)

साधु बलं किं? दैवं, कः साधुः? सर्वदा तुष्टः ।
दैवं किं? यत्सुकृतं, कः सुकृती? श्लाघ्यते च यः सद्भिः ॥

ஸாது பலம் கிம் தைவம் க: ஸாது: ஸர்வதாதுஷ்ட:।
தைவம் கிம் யத்ஸுக்ருதம் க: ஸுக்ருதீ ச்வாக்யதே சய: ஸத்பி:॥

நல்லவனுக்கு பலம் எது? அதிர்ஷ்டம். எவன் நல்லவன்? எப்பொழுதும் போதுமென்ற மனம் கொண்டவன். அதிர்ஷ்டம் என்பது எது? புண்யம் (முன் பிறவியில் செய்தது) எவன் புண்யமுள்ளவன்? நல்லோரால் எப்பொழுதும் புகழப்படுபவன்.

(49)

गृहमेधिनश्च किं मित्रं ? भार्या, को गृही च? यो यजते ।
को यज्ञो? यः श्रुत्या विहितः श्रेयस्करो नृणाम् ॥

க்ருஹமேதினஸ்சகிம் மித்ரம் பார்யா கோக்ருஹீ ச யோ யஜதே।
கோ யஜ்ஞோ ப: ச்ருத்யாவிஹித: ச்ரேயஸ்கரோ ந்ருணாம்॥

க்ருஹஸ்தனுக்கு யார் நண்பர்? மனைவி. க்ருஹஸ்தன் என்பான் யார்? யாகம் செய்பவன்? யாகம் (யஜ்ஞம்) என்பது என்ன? வேதத்தில் கூறப்பட்டு உலகில் அனைவருக்கும் நன்மை பயக்கக் கூடியது எதுவோ அதுவேயாகம்.

(50)

कस्य क्रिया हि सफला? यः पुनराचारवान् शिष्टः।
कः शिष्टो? यो वेदप्रमाणवान्को हतः? क्रियाभ्रष्टः॥

கஸ்ய க்ரியா ஹி ஸபலா ய: புனராசாரவான் சிஷ்ட:।
க:சிஷ்ட: யோ வேதப்ரமாணவான் கோ
ஹத: க்ரியாப்ரஷ்ட:॥

எவரது அனுஷ்டானம் பயனுள்ளது? எவறொருவர் நல்லொழுக்கமும் பயிற்சியும் உள்ளவரோ அவ ரது அனுஷ் டானம் பயனுள்ளது. சிஷ்டர் யார்? வேதத்தைப்ரமாண மாகக்கொண்டு அனுஷ்டானம் செய்பவர் யார் பாழானவர்? அனுஷ்டானம் இல்லாதவர்.

(51)

को धन्यः? संन्यासी, को मान्यः? पण्डितः साधुः।
कः सेव्यो? यो दाता, को दाता? योऽर्थितृप्तिमातनुते॥

கோதந்ய: ஸந்யாஸீ கோ மான்ய: பண்டித: ஸாது:।
க:ஸேவ்யோ யோதாதா கோதாதா யோऽதித்ருப்தி
மாதநுதே॥

யார் அதிர்ஷ்டசாலி? ஸந்நியாஸி. யார் போற்றத்தக் கவர்? பண்டிதரும் நல்லவரும். யார் ஸேவிக்கத்தக்கவர்? கொடையாளி. யார் கொடையாளி? வரியவர்களின் மனம் மகிழச் செய்பவர்.

(52)

किं भाग्यं देहवताम्? आरोग्यं, कः फली? कृषिकृत्।
कस्य न पापं? जपतः, कः पूर्णो? यः प्रजावान्स्यात्॥

கிம்பாக்யம் தேஹவதாம் ஆரோக்யம் க:பலீக்ருஷிக்ருத்।
கஸ்ய நபாபம் ஜபத: க:பூர்ணோய: ப்ரஜாவான்॥

தேகம் படைத்தவருக்கு பாக்யமாவது எது? நோயின்மை. பயன் பெறுபவன் யார்? உழவுத் தொழில் செய்பவர். எவருக்குபாபம் கொஞ்சமும் இல்லை? மந்த்ரஜபம் செய்பவருக்கு. எவன் எல்லாம் நிரம்பப் பெற்றவன்? பிள்ளைப்பேறு பெற்றவன்.

(53)

किं दुष्करं नराणां? यन्मनसो निग्रहः सततम्।
को ब्रह्मचर्यवान्स्यात्? यश्चास्खलितोर्ध्वरेतस्कः॥

கிம் துஷ்கரம் நராணாம் யன்மநஸோ நிக்ரஹ: ஸததம்।
கோப்ரஹ்மசர்சயவான் ஸ்யாத் யஸ்சாஸ்கலித -
ஊர்த்வரேதஸ்க:॥

உலகில் மனிதர்களுக்கு செய்ய முடியாதது எது? எப்பொழுதும் மனதை அடக்கி வைத்தல். எவன் ப்ரஹ்மசர்யம் உள்ளவன்? நிலைபிறழாத - மேலோங்கிய ரேதஸ் உடையவர்.

(54)

का च परदेवतोक्ता? चिच्छक्तिः, को जगद्भर्ता।
सूर्यः, सर्वेषां को जीवनहेतुः? स पर्जन्यः॥

கா ச பரதேவ தோக்தா சித்சக்தி: கோஜகத்பர்த்தா।
ஸுர்ய: ஸர்வேஷாம் கோ ஜீவனஹேது: ஸ பர்ஜன்ய:॥

பரதேவதையாக யாரைச் சொல்கிறார்கள்? சித்சக்தியை. உலகை கட்டிகாப்பது யார்? சூர்யன். எல்லோருக்கும் உயிர்வாழ காரணமாயிருப்பது யார்? அது மேகம்.

(55)

कः शूरो? यो भीतत्राता, त्राता च कः? सः गुरुः।
को हि जगद्गुरुरुक्तः? शंभुः, ज्ञानं कुतः? शिवादेव॥

க: சூரோ யோபீதத்ராதா த்ராதா ச க: ஸகுரு:।
கோ ஹிஜகத் குருருக்த: சம்பு: ஜ்ஞானம் குத: சிவாதேவ॥

உலகில் சூரன் யார்? பயந்தோரை அரவணைத்துக் காப்பவர். காப்பவர் யார்? அவர்தான் குரு. ஜகத்குரு என்று யாரை குறிப்பிடுகிறார்கள்? சிவனைத்தான். ஜ்ஞானம் எங்கிருந்து கிடைக்கிறது? அதுவும் சிவனிடமிருந்துதான்.

(56)

मुक्तिं लभेत कस्मात्? मुकुन्दभक्तेः, मुकुन्दः कः?।
यस्तारयेदविद्यां, का चाविद्या? यदात्मनोऽस्फूर्तिः॥

முக்திம் லபேத கஸ்மாத் முகுந்த பக்தே: முகுந்த: க:।
யஸ்தாரயேத் அவித்யாம் காசாவித்யா
யதாத்மநோऽஸ்பூர்தி:॥

எதனால் முக்தி பெறலாம்? முகுந்தனிடம் பக்தி செலுத்துவதனால். முகந்தன் யார்? அஜ்ஞானத்தைப் போக்குபவர். அவித்யை (அஜ்ஞானம்) எது? ஆத்மாவைப்பற்றி அறிய முட்டுக்கட்டை.

(57)

कस्य न शोको? यः स्यादक्रोधः, कि सुखं? तुष्टिः।
को राजा? रञ्जनकृत्, कश्च श्वा? नीचसेवको यः स्यात्॥

கஸ்ய நசோகோ ய: ஸ்தபாத் அக்ரோத: கிம் ஸுகம் துஷ்டி:।
கோ ராஜா ரஞ்ஜனக்ருத் கஸ்சச்வா நீசஸேவகோய:
ஸ்யாத்॥

எவரக்கு துன்பம் இல்லை? பழிவாங்கும் கோபமில்லாதவருக்கு துன்பமில்லை. எது சுகம்? மனமகிழ்ச்சி. அரசன் (ராஜா) யார்? ரஞ்ஜிக்க (மகிழச்) செய்பவர். நாய் எது? நீசனை சேவிப்பவர் தான்.

(58)

को मायी? परमेशः, क इन्द्रजालायते? प्रपञ्चोऽयम्।
कः स्वप्ननिभो? जाग्रद्व्यवहारः, सत्यमपि च किं? ब्रह्म॥

கோமாயீ பரமேச: க இந்த்ரஜாலாயதே ப்ரபஞ்சோऽம்।
கஸ்வப்னநிப: ஜாக்ரத்வ்யவஹார: ஸத்யமபி ச கிம்
ப்ரஹ்ம॥

மாயைக்கு சொந்தக்காரர் யார்? பரமேச்வரன் தான். இந்த்ரஜால வித்யையாக காண்பது எது? இந்த பிரபஞ்சம் தான். ஸ்வப்னமாக இருப்பது எது? இவ்வுலக நடையுடை பாவனை. ஸத்யமாயிருப்பது எது? அதுவே பிரம்மம்.

(59)

किं मिथ्या? यद्विद्यानाश्यं, तुच्छं तु? शशविषाणादि।
का चानिर्वचनीया ? माया, किं कल्पितं? द्वैतम्॥

கிம்மித்யா யத்வித்யாநாச்யம் துச்சம் து சச விஷாணாதி।
காசாநிர்வசநீயா மாயா கிம்கல்பிதம் த்வைதம்॥

எது பொய்காட்சி? ஜ்ஞானத்தால் அழிக்கப்படுவது. எது துச்சம்? முயல்கொம்பு. எது இன்னதென்று வரையறுத்துச் சொல்லமுடியாதது? மாயை. எது கற்பனை? த்வைதம் என்ற இரட்டைக்காட்சி.

(60)

किं पारमार्थिकं स्यादद्वैतं, चाज्ञता कुतो? अनादेः ।
वपुषश्च पोषकं किं? प्रारब्धं चान्नदायि किं? चायुः ॥

கிம்பாரமார்த்திகம் ஸ்யாதத்வைதம்
சாஜ்ஞதாகுதோऽநாதே:।
பரு வபுஷஸ்சபோஷகம் கிம் ப்ராரப்தம்
சான்னதாயிகிம்சாயு:॥

எது மிகவும் உண்மையானது? அத்வைதம், ஆத்மஜ்ஞானம் எதனால் ஏற்படவில்லை. அநாதியான அவித்யையால். இந்த சரீரம் எப்படி வளர்த்தது? ப்ராரப்தகர்மாவால். இந்த சரீரம் வளர அன்னம் (அடிப்படை) எது? ஆயுள்.

(61)

को ब्राह्मणैरुपास्यो? गायत्र्यर्काग्निगोचरः शंभुः ।
गायत्र्यामादित्ये चाग्नौ शंभौ च किं नु? तत्त्वम् ॥

கோப்ராஹ்மனை ருபாஸ்யோ காயத்ர்யர்காக்னி கோசர: சம்பு:।
காபத்ர்யாம் ஆதித்யே சாக்னெள சம்பெறச கிம்தத்
தத்வம்॥

பிராம்மணர்களால் உபாஸிக்கத்தக்கவர் யார்? காயத்ரீ, சூர்யன், அக்னி இந்த கடவுளரிடத்தில் அந்தர்யாமியான சம்பு - சங்கரர்தான். மேற்படி காயத்ரி, சூர்யன், அக்னி, சம்பு இவரிடத்தில் உள்ளது என்ன? தத்வம் - ஆத்மா.

(62)

प्रत्यक्षदेवता का? माता, पूज्यो गुरुश्च कः? तातः ।
कः सर्वदेवतात्मा? विद्याकर्मान्वितो विप्रः ॥

ப்ரத்யக்ஷதேவதா கா மாதா பூஜ்யோ குருஸ்ச க ஸ்தாத:।
க: ஸர்வதேவதாத்மா வித்யாகர்மான்விதோ விப்ர:॥

யார் கண் கண்ட தெய்வம்? மாதா - தாய். பூஜைக்குரிய குரு யார்? தந்தை. யார் எல்லா தேவதாஸ்ரூபி? வித்யை - அனுஷ்டானம் இவற்றுடன் விளங்கும் பிராமணர்.

(63)

कश्च कुलक्षयहेतुः? संतापः सज्जनेषु योऽकारि ।
केषाममोघवचनं? ये च पुनः सत्यमौनशमशीलाः ॥

கஸ்ச குலக்ஷய ஹேது: ஸந்தாப: ஸஜ்ஜநேஷு யோரகாரி।
கேஷாமமோகவசனம்யேச புன: ஸத்ய-மௌன-சம-சீலா:॥

குலத்தையே அழிக்கவல்லது எதுவோ? நல்லோரிடத்தில் வேண்டுமென்றே செய்யப்படும் பொறாமை. யாருடைய வார்த்தை நிச்சயமாக பலிக்கக்கூடியது? ஸத்யம் - மௌனம், சமம் (அமைதி) இவற்றிலேயே திளைத்தவரின் வார்த்தை வீணாகாது.

(64)

किं जन्म? विषयसङ्गः, किमुत्तरं जन्म? पुत्रः स्यात् ।
कोऽपरिहार्यो? मृत्युः, कुत्र पदं विन्यसेच्च? दृक्पूते ॥

கிம்ஜன்ம விஷயஸங்க: கிமுத்தரம் ஜன்ம புத்ர: ஸ்யாத்।
கோடபரிஹார்யோ ம்ருத்யு: குத்ரபதம் விந்யஸேத் ச த்ருக்பூதே॥

பிறவி எது? உலகியல் விஷயங்களில் பற்றுதான். அடுத்த பிறவி எது? மகனாய் இருப்பது. எது விலக்க முடியாதது? மரணம். எங்கு கால் வைக்கலாம்? கண்பார்வையால் பார்த்து 'சரி' எனத்தோன்றுவதில்.

(65)

पात्रं किमन्नदाने? क्षुधितं, कोऽर्च्यो हि? भगवदवतारः ।
कश्च भगवान्? महेशः शङ्करनारायणात्मैकः ॥

பாத்ரம் கிமன்னதானே க்ஷுதிதம் கோடர்ச்யோ பகவத வதார:।
கஸ்ச பகவான் மஹேச: சங்கரநாராயணாத்மைக:॥

அன்னமிடுவதற்குரிய இடம் எது? பசியெடுத்தவன். யார் யார் பூஜிக்கத்தக்கவர்? பகவானுடைய அவதாரங்கள். யார் பகவான்? மஹேசர் - சங்கர நாராயணன் என்று ஒருமித்த ரூபங் கொண்டவர்.

(66)

फलमपि भगवद्भक्तेः किं? तल्लोकस्वरूपसाक्षात्वम्।
मोक्षश्च को? ह्यविद्यास्तमयः, कः सर्ववेदभूः? अथ चोम्॥

பலமபி பகவத்பக்தே: கிம் தல்லோக ஸ்வரூப
ஸாக்ஷாத்வ

மோக்ஷஸ்ச கோ ஹ்யவித்யாஸ்தமய: க: ஸர்வ வேத பூ
அத ஓ

பகவானிடம் பக்தி செலுத்துவதன் பயன் என்ன அவரதுஸாலோக்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யமென்ற மூன்றுமே மோக்ஷ மென்றால் என்ன? அவிதயை இல்லாதொழிதல். எ எல்லா வேதங்களுக்கும் தொடக்கம்? ஓம் என்ற ப்ரணவம்.

(67)

इत्येषा कण्ठस्था प्रश्नोत्तररत्नमालिका येषाम्।
ते मुक्ताभरणा इव विमलाश्चाभान्ति सत्समाजेषु॥

இத்யேஷா கண்டஸ்தா ப்ரச்னோத்தர ரத்னமாலிகா
யேஷ

தேமுக்தாபரணா இவ விமலாஸ்சாபாந்திஸத்ஸமா
ஜே

இவ்வாறான இந்த ப்ரச்னோத்தரரத்னமாலிகா எவரு கழுத்தில் அமைகிறதோ அவர்கள் முக்தர்கள் (மே மடைந்தோரின்) அலங்காரமாகவும், சோபை பொருந் வர்களாக (விமலர்களாகவும்) நல்லோர் கூட்டத் விளங்குவார்கள்.

ப்ரச்னோத்தரரத்னமாலிகா முற்றிற்று.

